# भावनोपनिषद्भाषाभाष्यम्

# (பாவநோபநிஷத் தமிழுரை)

## பாவப்ரகாசிகா



வாதூல. வே. ராமசந்த்ரசர்மா
இயற்றியது.



அடையாறு

1948.

# முகவுரை

நூற்றெட்டு உபநிஷத்துக்களில் ஒன்றாகிய இந்த பாவனோபநிஷத்தானது ஸ்ரீ த்ரிபுரஸுந்தரியினுடைய ஸ்ரீ சக்ரத்தின் ஸ்வரூபத்தை நன்கு விளக்குவதாகும். இது முப்பத்தாறு வாக்கியங்களைக் கொண்ட சிறு நூலாக இருந்தாலும் ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்டு ஸ்ரீசக்ரத்தினுடைய மானஸிகோபாஸனையைக் கூறுவதுமாம். இங்கு 'பாவனை' என்னும் பதத்திற்கு உபாஸனையென்றாவது, அல்லது மஹாயாகம் என்றாவது பொருள் கொள்ளலாம். அங்குமிங்கும் அலைந்து கொண்டிருக்கின்ற புலன்களை ஒரு முகப்படுத்தி மனோலயத்தோடு ஸமாதியிலிருப்பதே பாவனையென்பது.

இவ்விதம் பாவனைசெய்வதை இச்சிறு நூலுக்கு உரை எழுதிய ஸ்ரீ பாஸ்கரராயர் மஹாயாகமெனச் சொல்லுகிறார். அவர் தமது "ஸௌபாக்யபாஸ்கரம்" என்ற ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமத்தினுடைய உரையிலே அடியில் வருமாறு பொருள் விளக்கம் கொடுக்கிறார். " மஹாயாகக்ரமாராத்யா " என்ற நாமாவுக்குப் பொருள்

கூறும் பொழுது; "அல்லது பாவநோபநிஷத்தால் விளக்கப்படுகின்ற மஹாயாகமாகும். இந்த மஹாயாகமானது மிகவும் ரஹஸ்யமானது. அது (ஸ்ரீகுருவினுடைய உபதேசம் பெற்ற) சிவயோகிகளுக்கே ஸாத்யமாகக் கூடியது. இந்த மஹாயாகத்தைக்குறித்து, எங்களால் அந்த பாவநோபநிஷத்தினுடைய பாஷ்யத்திலும், அதனுடைய பிரயோகவிளக்கத்திலும் விரிவாக சொல்லியிருப்பதால் இங்கு அதிகமாக ஒன்றும் எழுதவில்லை" எனச்சொல்லுகிறார்.*

இச்சிறு நூலுக்கு ஸ்ரீபாஸ்கரராயரும், ஸ்ரீஉபநிஷத்ப்ரஹ்மயோகியும், ஸ்ரீ அப்பய்ய சிவாசாரியரும் உரை எழுதியிருக்கின்றனர். இவைகளில் ஸ்ரீ பாஸ்கரராயருடைய உரையானது சாலச்சிறந்ததும், உபநிஷத்தினுடைய கருத்துக்களை வெகு அழகாக வெளியிடுவதுமாகும். எஞ்சிய இரண்டும் மிகச் சுருக்கமானது. விஷயங்களுடைய விளக்கமும் அவ்வளவு சிறப்பாகக் கிடையாது. இந்த உபநிஷத்தை ஸ்ரீபாஸ்கரராயருடைய உரையோடு ஸ்ரீஅப்பய்ய சிவாசாரியருடைய உரையையும் சேர்த்து கல்கத்தாவிலே ஆகமாநுஸந்தான ஸமிதியிலே 'ஸ்ரீ அவலான்' அவர்கள் 'கௌலோபநிஷத்துக்கள்' என்ற

---

*यद्वा भावनोपनिषदा प्रतिपादितो यागो रहस्यतरः शिवयोगिसाध्यो महायागः। स चास्माभिः तद्भाष्ये, तत्प्रयोगविधौ च विशदीकृत इति नेहोच्यते।

தலைப்புடன் வெளியிட்டிருக்கிறார். ஸ்ரீ உபநிஷத் ப்ரஹ்மயோகியினுடைய உரையை அடையாறிலுள்ள ப்ரஹ்மஞானசங்கத்தினுடைய புத்தகசாலையில் "சாக்தோபநிஷத்துக்கள்" என்ற தலைப்புடன் வெளியிட்டிருக்கின்றனர்.

இந்த உபநிஷத்தைத் தினந்தோறும் தவறாது பாராயணம் செய்து வருகின்ற சிலர்கள் இன்றைக்கும் பலர் இருக்கின்றனர். அவர்களில் சிலர் சாஸ்திரங்களில் ஆழ்ந்த பிரவேசமில்லாது சிரத்தையுடன் பாராயணம் செய்து வருகின்றனர். ஆகவே பொருளறியாது மூலத்தை மாத்திரம் பாராயணம் செய்வதைக் காட்டிலும் பொருளறிந்து பாராயணம் செய்வது சிறந்ததெனக் கருதி இதனைப் பொருள் விளக்கத்தோடு தமிழில் எழுதி வெளியிடத் துணிந்தேன்.

இதனைக் கண்ணுறும் ஆஸ்திக அன்பர்கள் அனைவரும் குற்றம் களைந்து குணத்தைக் கொண்டு எனது உழைப்பைப் பயனுள்ளதாகச் செய்வதோடு, என்னை மேல்மேலும் இது போன்ற நூல்களை வெளியிட உதவியளிப்பார்களென நம்புகிறேன். இப்பணியிலே என்னை முயற்சி தளராது அவ்வப்பொழுது பொருள் உதவி செய்து தருவதோடு, மற்றும் பலவித ஸாதனங்களைச் செய்துகொடுத்து உதவும், எனது ஆத்மநண்பர் ஸ்ரீ ஸீதா

ராமய்யர் அவர்களுக்கு எனது ஹ்ருதய பூர்வமான நன்றி உரித்தாகும்.

முடிவாக எனக்குப் பல வகையிலும் உடனிருந்து அறிவைப்புகட்டி, ஆத்மசிந்தனையை விளக்கி, தூய வாழ்க்கைக்கு வழி வகுத்த எனது பேராசிரியருடைய திருவடித் தாமரைகளிலே இச்சிறுநூலை ஸமர்ப்பணம் செய்கிறேன்.

ஸர்வதாரி சித்திரை 30
ஸித்தாச்ரமம்
அடையாறு

இங்ஙனம்
**வாதூல. வே. ராமசந்த்ரசர்மா.**

# भावनोपनिषद्भाषाभाष्यम्

—∘∘⁂∘∘—

## பாவநோபநிஷத் தமிழுரை

### பாவப்ரகாசிகா.

#### தோற்றுவாய்.

இவ்வுலகில் ஸ்ரீமஹாத்ரிபுரஸுந்தரியினுடைய உபாஸனையானது, பஹிர்யாகம், அந்தர்யாகம், பாவனையென மூன்று பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கின்றது. அவை முறையே, ஸ்தூலம் (வெளிப்படை) ஸூக்ஷ்மம் (நுண்மை) பரம் (விசேஷித்தது) என்ற பேதங்களோடு காயிகம், வாசிகம், மாநஸிகமென மூன்று விதங்களாகும். காயிகோபாஸனையைக்காட்டிலும், வாசிகோபாஸனையும், வாசிகோபாஸனையைக்காட்டிலும், மாநஸிகோபாஸனையும் சிறந்ததாகும். காயிகம், வாசிகம் இவைகளைக்குறித்து ஸ்ரீ திரிபுராதாபிநீ முதலிய உபநிஷத்துக்களில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. அவைகளைக் காட்டிலும் ரஹஸ்யமாயுள்ள ஸ்ரீசக்ரத்தினுடைய பாவனையை-மாநஸிகோபாஸனையை-இந்த பாவனோபநிஷத்தில், ஸ்ரீ தேவியை யுபாஸிக்கின்ற யோகிகளை அநுக்ரஹம் செய்ய நினைத்து; “ श्रीगुरुः सर्वकारणभूता शक्तिः ” எனத் தொடங்கி; “ य एवं वेद ; योऽथर्वशिरोऽधीते ” என்ற முடிவுள்ள முப்பத்தாறு வாக்கியங்களைக் கொண்டதாக விளக்கப்படுகிறது.

இச்சிறப்புள்ள வாக்கியங்களுக்குச் சிறியதோர் குறிப்புரையும் தமிழில் எழுதி கீழே கொடுக்கப்படுகிறது.

श्रीगुरुः सर्वकारणभूता शक्तिः ॥ १ ॥

(பொ-ரை) பிரபஞ்சத்தின் தோற்றம் முதலிய ஸகல விஷயங்களுக்கும் மேலான காரணமாக விளங்குகின்ற ஸ்ரீகுருவே "சித்" என்ற சிவசக்தியின் வடிவாகும்.

கடவுளுடைய அநுக்ரஹத்தாலுண்டாகிய விவேகமே (அறிவு) ஸமஸ்த ஸந்தேஹங்களையுமகற்றி மந்த்ரவீர்ய பிரகாசங்களால் ஸூக்ஷ்மதத்துவங்களை அறியச்செய்வதாலும் 'விமர்ச' (விசாரம் அல்லது ஆராய்ச்சி) என்ற பெயரோடு விளங்குகின்றவர் ஸ்ரீகுருவே என்பதும் தாத்பர்யம். (1)

तेन नवरन्ध्ररूपो देहः ॥ २ ॥

(பொ-ரை) ஆதலின்; நவ (ஒன்பது) ரந்த்ரமாக (த்வாரம்) அமைந்துள்ள சரீரமே ஸ்ரீகுருவின் வடிவமாகும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த ஸ்ரீகுருவினுடைய வடிவாயமைந்துள்ள விமர்சசக்தியானது; சரீரத்திலுள்ள இரண்டு கண்கள்; இரண்டு செவிகள்; இரண்டு நாசித்வாரங்கள்; வாய்; பாயு; உபஸ்தம்; முதலிய ஒவ்வொன்றும் ஒன்பது த்வாரங்களின் மூலமாகப் பிரகாசிக்கின்றது. ஆகவே இந்த ஒன்பது த்வாரங்களாலமைந்த தோற்றமே ஸ்ரீகுருவின் வடிவமாம்.

நவத்வாரங்களினின்றும் வேறுபடாத ஸ்ரீகுருவடிவாக விளங்கும் விமர்ச சக்தியானது; திவ்யௌகம்; (தேவர்கள் கூட்டம்) ஸித்தௌகம்; (ஸித்தர்கள் கூட்டம்) மாநவௌகம் (மனிதர்கள் கூட்டம்) என மூவகைப்படும். அக் கூட்டங்கள் ஒவ்வொன்றுக்கும் மும்மூன்றாக ஒன்பது ரந்த்ரங்களும் அமைவனவாம். அவை முறையே; இரண்டு செவிகளும் வாக்கும் திவ்யௌகமெனப்படும். இரண்டு கண்களும் உபஸ்தமும் ஸித்தௌகமெனப்படும். இரண்டு நாசித்வாரங்களும் பாயுவும் மாநவௌகமெனப்படும்.

இவ்விதம் அமைந்த இந்த விமர்சநவகங்களுக்கும் (ஒன்பதுகள்) மூலகாரணமாகவுள்ளது ஸுஷும்ணாநாடி யெனப்படுவது. அந்த ஸுஷும்ணாநாடியின் கீழே நவத்வாரங்களின் வடிவாயமைந்து செவி முதலிய இந்திரியங்களை (பொறிகள்) இயங்கச் செய்யும் நாடிகள் (நரம்புகள்) பொருத்தப் பட்டிருக்கின்றன. ஸுஷும்ணையைக் காட்டிலும் வேறான 'சித்' என்ற சக்தியானது நாடிகளின் வழியாக விஷயங்களை விளங்கச் செய்கின்றது. அறிவுகளுடைய வியாபாரங் (தொழில்) களோடு கூடிய அந்த ஒளியின் வடிவாகிய 'சித்' என்னும் சக்தியையும், பிராண சக்தியோடு சேர்ந்த ஸுஷும்ணையையும் சேர்த்துத்தான் 'விமர்சமயீ' என அழைக்கப்படுகிறது. இந்த விமர்ச சக்தியினுடைய சரீரமும் செவிகள் முதலிய நவத்வாரங்களோடு சேர்ந்திருக்கின்றது. எனவே செவிகள் முதலானவைகளுக்கும் சிரவணம் (கேட்பது) முதலிய விஷயங்கள் உண்டாவதால் அவைகளும் விமர்சவடிவங்களேயாகும்.

இவ்விதம் சரீரத்திலுள்ள நவத்வாரங்கள் ஸ்ரீகுருக்களான நவநாதர்கள் எனக்கிடைப்பதால் நவத்வாரங்களுடைய காரியங்களான விஷயங்களுடைய விமர்ச ஸமஷ்டியை ஸ்ரீகுருவைக்காட்டிலும் வேறுபடாது பாவனை செய்ய வேண்டுமென்பதும் கருத்தாகும்.

நவநாதர்கள் வருமாறு—பிரகாசாநந்தநாதர்; விமர்சாநந்தநாதர்; ஆநந்தாநந்தநாதர்; ஞாநாநந்தநாதர்; ஸத்யாநந்தநாதர்; பூர்ணாநந்தநாதர்; ஸ்வபாவாநந்தநாதர்; பிரதிபாநந்தநாதர்; ஸுபகாநந்தநாதர் என்பதாகும். (2)

## नवचक्ररूपं श्रीचक्रम् ॥ ३ ॥

(பொ-ரை) நவத்வாரங்களாலான (சக்ரரூபங்கள்) இச்சரீரமே ஸ்ரீசக்ரமாகும்.

(தன்னுடைய) இச்சரீரமே த்ரைலோக்ய (மூன்று உலகம்) மோஹநம் முதலிய நவசக்ரங்களுடைய ஸமஷ்டியாயிருக்கின்ற ஸ்ரீசக்ரத்தின் வடிவமாகும். த்ரைலோக்ய மோஹநமென்பது வருமாறு—: ஸர்வாசாபரிபூரகம்; ஸர்வஸம்க்ஷோபணம்; ஸர்வஸௌபாக்யதம்; ஸர்வார்த்தஸாதகம்; ஸர்வரக்ஷாகரம்; ஸர்வரோகஹரம்; ஸர்வஸித்திப்ரதம்; ஸர்வாநந்தமயம் என்பதாகும். இவைகளே த்ரைலோக்ய மோஹநாதிகள் என்ற நவசக்ரங்களாகும். (3)

## वराही पितृरूपा कुरुकुल्ला बलिदेवता माता ॥ ४ ॥

(பொ-ரை) வாராஹீ என்பது சரீரத்திலுள்ள தாதுக்களாகும். குருகுல்லா என்பது மாம்ஸங்களாகும். வாராஹீ தேவீ தந்தையின் வடிவம். பலிதேவதையான குரு குல்லா தேவீ தாயின் வடிவமாகும்.

அதாவது வாராஹீ தேவதையைத் தந்தையின் வடிவமாகவும்; குருகுல்லா தேவதையைத் தாயின் வடிவமாகவும் பாவனைசெய்ய வேண்டுமென்பது கருத்தாகும். இவ்விடத்தில் வாராஹீ சப்தமானது பெண்பாலாக இருந்த பொழுதிலும் புருஷமுகமிருப்பது கொண்டும், புருஷசக்தி இருப்பது கொண்டும் தந்தையின் வடிவாகச்சொல்லப்பட்டுள்ளது. (4)

**पुरुषार्थाः सागराः ॥ ५ ॥**

(பொ-ரை) (நான்கு) புருஷார்த்தங்கள் (பரந்த) கடல்களாகும்.

தங்களுடைய தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் (அறம்-பொருள்-இன்பம்-வீடு) என்ற நான்குவித புருஷார்த்தங்களும் நான்கு திக்குகளையும் சூழ்ந்திருக்கின்ற ஸமுத்ரங்களாகும். (5)

**देहो नवरत्नद्वीपः ॥ ६ ॥**

**त्वगादिसप्तधातुरोमसंयुक्तः ॥ ७ ॥**

**संकल्पाः कल्पतरवस्तेजः कल्पकोद्यानम् ॥ ८ ॥**

(பொ-ரை) இச்சரீரமே நவரத்னத்தீவு எனப்படும். தோல் முதலிய ஏழு தாதுக்களும் ரோமங்களோடு சேர்ந்தவைகள். தோற்றங்களே கற்பகவிருக்ஷங்கள். ஒளியே (மனமே) அந்தக் கற்பகங்கள் நிறைந்த நந்தவனமாகும்.

இங்கு தன்னுடைய சரீரத்தையே நவரத்னங்கள் நிறைந்த தீவு என்றும் ; த்வக் (தோல்) முதலிய என்றதால் மற்றவைகளையும் கொள்ள வேண்டும். அவை வருமாறு ; த்வக் ; (தோல்) சர்ம ; (ரோமம்) மாம்ஸம் ; ரக்தம் ; ரஸம் ; சுக்லம்; (வீர்யம்) மஜ்ஜை; எலும்பு ; ஓஜஸ்; (காந்தி அல்லது மனம்) என்ற ஒன்பது தாதுக்களும் முறையே; புஷ்பராகம்; நீலம் ; வைடூர்யம் ; பவழம்; முத்து ; மரகதம் ; வஜ்ரம், கோமேதகம்; பத்மராகமென வழங்கும் நவரத்னங்களுடைய வடிவங்களாகும்.

மற்றும் ஸ்ரீதிரிபுராதிகளான நவசக்ரேச்வரிகளையும் முன்பு கூறிய ஒன்பது தாதுக்களோடு அபேதமாகப் பாவனை செய்யவேண்டுமென வேறு பிரமாணங்களாலும் தெரியவருவதால் அதுவும் ஆதரிக்கத்தக்கதேயாம். அது வருமாறு—: திரிபுரா ; திரிபுரேச்வரீ ; திரிபுரஸுந்தரீ ; திரிபுரவாஸினீ ; திரிபுராஸ்ரீ ; திரிபுரமாலினீ ; திரிபுராஸித்தா ; திரிபுராம்பா ; ஸ்ரீமஹாதிரிபுரஸுந்தரீ என்ற இந்த ஒன்பது தேவதைகளும் நவசக்ரேச்வரிகளாவர்.

ஸங்கல்பத்தோடு கூடக் கர்மாக்களைச் செய்தால்தான் ஒருவன் விரும்புகின்ற பலனையடையமுடியும். ஆதலால் மானஸிக வடிவங்களாகிய தோற்றங்களே ஸந்தானப் ; ஹரிசந்தனம் ; மந்தாரம்; பாரிஜாதம் ; கதம்பம் முதலான கற்பக விருக்ஷங்களாகும். அந்தக்கற்பக விருக்ஷங்களுக்கு ஆதாரமாயுள்ளது ஒளியே (தேஜஸ்) யாகும். அவ்வொளியின் வடிவமே கற்பகச் சோலைகள் நிறைந்த நந்தநவனம். "**मनो ज्योतिः**" "ஒளியே மனம்" என்று தைத்திரீய ச்ருதியும் கூறும். (6—8)

रसनया भाव्यमानया मधुराम्लतिक्त-
कटुकषायलवणरसाः षडृतवः ॥ ९ ॥

(பொ-ரை) நாக்கினல் சுவைத்து அறியப்படுகின்ற மதுரம் (இனிப்பு) முதலிய ஆறு சுவைகளும் ஆறு ருதுக்கள்(பெரும்பொழுது) ஆவன.

நாக்கினல் சுவைக்கத் தகுதிவாய்ந்த இனிப்பு, புளிப்பு, கைப்பு, உவர்ப்பு, கார்ப்பு, துவர்ப்பு என்ற ஆறு சுவைகளும் முறையே ; வஸந்தம் ; (வேனில்) கிரீஷ்மம் ; (இளவேனில்) வர்ஷா ; (கார்) சரத் ; (கூதிர்) ஹேமந்தம் ; (முன்பனி) சிசிரம் (பின்பனி) என்ற ஆறு ருதுக்களோடு அபேதவடிவாகக் கொள்ள வேண்டும். மற்றும் வைத்திய நூல்களில் ஒவ்வொரு ருதுக்களுக்கும் ரஸங்களுக்கும் பொருத்த முண்டு எனக்கூறப்பட்டிருப்பதும் இங்கு கவனிக்கத் தக்கதாகும். (9)

ज्ञानमर्घ्यं ज्ञेयं हविः ज्ञाता होता ज्ञातृज्ञानज्ञेयाना-
मभेदभावनं श्रीचक्रपूजनम् ॥ १० ॥

(பொ-ரை) ஞானமே (அறிவு) அர்க்யம் ; அறியத் தக்க வஸ்துவே ஹவிஸாகும் ; அந்த வஸ்துவை அறிகின்றவனே ஹோதா ; (வேள்வி செய்யுமதிகாரி) அறிகின்றவனையும் அறிந்து கொள்ளுவதற்குச் சாதனமாயமைந்துள்ள ஞானத்தையும், அறிந்து கொள்ளக்கூடிய வஸ்துவையும் ஒன்ருகப் பாவனை செய்வதே ஸ்ரீசக்ரபூஜை யெனப்படுவது.

இவ்விடத்தில் 'குடம்' முதலியவைகளை அறிந்து கொள்ளுகின்ற ஞாநத்தையே பூஜைக்குரிய ஸாதநமாகிய

அர்க்யமென்றும்; வெளிவிஷயங்களாகிய 'இது' 'அது' என்று மனதில் தெரிந்து கொள்ளக்கூடிய பிரபஞ்சத்தையே (இது அது என்னும் அறிவு) ஹவிஸாகவும்; (அன்னம்-நைவேத்யம்) அவைகளை (மனதில்) அறிகின்றவனே ஹோதா வென்றும்; இவ்விதம் ஞாத்ரு (அறியக்கூடியவன்) ஞாந (அறிவதற்கு உதவியாயுள்ளது) ஜ்ஞேயங் (அறியத்தக்க வஸ்து) களை ஒன்றாகச் சேர்த்துப் பாவனை செய்வதே ஸ்ரீசக்ரபூஜையென்பதும் கருத்தாகும். பூஜிக்கத்தக்க தேவதையே சித்ரூபிணீ எனப்ரஸித்தமாயிருப்பதால் இங்கே தனியாகச் சொல்லவில்லை. தனது ஆத்மசைதன்யத்திலிருந்து பிரிந்து தனியே தோற்றமளிக்கும் ஞாத்ரு-ஞாந-ஜ்ஞேயங்களுடைய நாமரூபங்களை நன்றாக விசாரணை செய்து கேவலம் சின்மாத்ரரூபமாகப் பாவிக்க வேண்டுமென்பது தாத்பர்யம்.

இங்கே பூஜையாவது; உலகிலே அர்க்யம் முதலியவைகளையும், நைவேத்யம் முதலியவைகளையும், தன்னையும் ஆராதிக்கின்ற தேவதையினிடத்தில் ஸமர்ப்பணம் செய்வது ஸம்ப்ரதாயம். அது போலவே அந்த மூன்று ஸாதனங்களையும், 'சித்' என்றதோடு வேறுபடாது அபேதமாகப் பாவனைசெய்யவேண்டுமென்பதேயாகும். பூஜைக்கும் பாவனைக்கும் ஒற்றுமை இருந்தபொழுதிலும் பூஜா கர்ம விஷயம் என்று தெரிவிப்பதற்காகவே "**एकीकरणम्**" "ஒன்றாகச் செய்வது" என்ற பதம் பிரயோகம் செய்யப்பட்டிருக்கிறது என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும். (10)

**नियतिः शृङ्गारादयो रसा अणिमादयः ; कामक्रोध-**
**लोभमोहमदमात्सर्यपुण्यपापमया ब्राह्म्याद्यष्टशक्तयः ॥११॥**

(போ-ரை) *நியதி ஒன்று; சிருங்காரம் முதலான ரஸங்கள் ஒன்பது; இந்தப் பத்தும், அணிமா முதலான பத்து வித சக்திகளின் அபேத வடிவங்களாம். காமம் முதலானவைகளும், புண்யபாபங்களும், ப்ராஹ்மீ முதலிய எட்டு விதமான ஸித்திகளின் அபேத வடிவங்களாம்.

இவ்விடத்தில் நியதி என்றது பிராரப்தத்தைக் குறிப்பதாகும். சிருங்காரம் முதல் என்றதால் ஹாஸ்யம்; கருணம்; ரௌத்ரம்; வீரம்; பயாநகம்; பீபத்ஸம்; அத்புதம்; சாந்தம் எனப் பிறவும் கொள்ளவேண்டும். ஆகவே இந்த பத்து எண்ணிக்கைகளோடு முறையே; அணிமா முதல் என்றதால், மஹிமா; லகிமா; கரிமா; ப்ராப்தி; ப்ராகாம்யம்; ஈசித்வம்: வசித்வம்; புத்தி; இச்சை என்ற மற்றவைகளையும் கொள்ளவேண்டும். இந்த பத்து ஸித்திகளோடு, காமம்; குரோதம்; லோபம்; மோஹம்; மதம்; மாத்ஸர்யம்; புண்யம்; பாபம் என்ற எட்டையும்; ப்ராஹ்மீ முதல் என்றதால் மாஹேச்வரீ; கௌமாரீ; வைஷ்ணவி; வாராஹீ; இந்த்ராணீ; சாமுண்டா; மஹாலக்ஷ்மீ என்ற எட்டையும் கொள்ளவேண்டும். ஆகவே இந்த எட்டுவித சக்திகளோடும், முன்பு சொல்லப்பட்ட பத்துவித ஸித்திகளோடும், முறையே நியதி முதல் சாந்த

---

* நியதி என்பது - ஸங்கோசமடைந்த (சுருங்கிய) வியாபகத்துவ சக்தி. அல்லது 'எனக்கு இது செய்யவேண்டியது' என்ற நியமத்திற்குக் காரணமான தத்துவ விசேஷம். அல்லது கருமத்தை-செய்கையை-நிச்சயம் பண்ணுமுறுதியெனவும் கூறலாம்.

மீருகவுள்ளவைகளையும், காமம் முதல் பாபமீருகவுள்ளவைகளையும் அபேதமாகப் பாவனை செய்யவேண்டுமென்பது தாத்பர்யம். (11)

**आधारनवकं मुद्राशक्तयः ॥ १२ ॥**

(பொ-ரை) மூலாதாரம் முதலான ஒன்பதும் முத்ரா சக்திகளாகும்.

*ஆதாரங்கள் ஒன்பதும் வருமாறு-மூலாதாரம்; ஸ்வாதிஷ்டாநம்; மணிபூரகம்: அநாஹதம்; விசுத்தி; ஆஜ்ஞா; என்ற ஆறும்; இவைகளுக்கு மேலே அகுல ஸஹஸ்ராரம் ஒன்றும்; கீழே குலஸஹஸ்ராரமென மற்றொன்றும்; லம்பிகாக்ரம் (இந்த்ரயோநி - உள் நாக்கு,) ஒன்றுமாகக் கூடிய ஒன்பது ஆதாரங்களுமாகும். இவைகளையும் ஸமஷ்டி ஒன்றையும் சேர்க்க பத்து ஆதாரங்களாகின்றன. இந்தப் பத்து ஆதாரங்களையும் முறையே ஸர்வஸம்க்ஷோபிணீ; ஸர்வவித்ராவிணீ; ஸர்வாகர்ஷிணீ; ஸர்வவசம்கரீ; ஸர்வோந்மாதிநீ; ஸர்வமஹாங்குசா; ஸர்வகேசரீ; ஸர்வபீஜா; ஸர்வயோநி; ஸர்வத்ரிகண்டா என்ற பத்துவிதமான முத்ராசக்திகளோடும் அபேதமாகப் பாவனை செய்யவேண்டும். (12)

**पृथिव्यप्तेजोवाय्वाकाशश्रोत्रत्वक्चक्षुर्जिह्वाघ्राणवाक्पाणिपाद-पायूपस्थानि मनोविकाराः कामाकर्षिण्यादिषोडश शक्तयः ॥१३॥**

(பொ-ரை) பிருதிவீ முதல் உபஸ்தமிறுதியாகவுள்ளவைகள் ஸர்வாசாபரிபூரகத்திலுள்ள காமாகர்ஷிணீ முதலான சக்திதேவதைகளின் வடிவங்களாகும்.

---

* இந்த ஆதாரங்களுடைய விளக்கங்களை எனது பவாநீ புஜங்கஸ்தோத்திரத்தின் தமிழுரையில் விரிவாகக்காணலாகும்.

ப்ருத்வீ ; (பூமி) அப்பு ; (ஜலம்) தேஜஸ் ; (நெருப்பு) வாயு ; (காற்று) ஆகாசம் ; ச்ரோத்ரம் (செவி) த்வக் ; (தோல்) சக்ஷுஸ் ; (கண்) ஜிஹ்வா ; (நாக்கு) க்ராணம் ; (நாசி) வாக்கு ; (வாய்) பாதம் ; (கால்) பாணி ; (கை) பாயு ; உபஸ்தம் ; (ஜநநேந்திரியம்) விக்ருதமான மனோவிகாரம் அல்லது மனத்தோற்றங்கள் - இந்தப் பதினாறும் முறையே ; காமாகர்ஷிணீ ; புத்யாகர்ஷிணீ ; அஹங்காராகர்ஷிணீ ; சப்தாகர்ஷிணீ ; ஸ்பர்சாகர்ஷிணீ ; ரூபாகர்ஷிணீ ; ரஸாகர்ஷிணீ ; கந்தாகர்ஷிணீ ; சித்தாகர்ஷிணீ ; தைர்யாகர்ஷிணீ ; ஸ்ம்ருத்யாகர்ஷிணீ ; நாமாகர்ஷிணீ ; பீஜாகர்ஷிணீ ; ஆத்மாகர்ஷிணீ ; அம்ருதாகர்ஷிணீ ; சரீராகர்ஷிணீ என்ற பதினாறு சக்திகளோடு அபேதமாகக் கொள்ளவேண்டும். இச்சக்திகளனைத்தும் ஸர்வாசாபரிபூரகத்திலிருப்பவைகள். (13)

**वचनादानगमनविसर्गानन्दहानोपादानोपेक्षाख्यबुद्धयोऽनङ्गकुसुमाद्यष्टौ ॥ १४ ॥**

(போ-ரை) வசனம் முதல் புத்திவரையிலுள்ள எட்டும் ; எட்டு தாமரைகளிலுள்ள அநங்ககுஸுமா முதலிய எட்டுவித சக்திகளின் வடிவங்களாகும்.

இங்கே வசனம் (சொல்) ஆதானம் (எடுத்தல்) கமனம் (நடத்தல்) விஸர்க்கம் (வெளிவிடுதல்) ஆநந்தம் (மகிழ்தல்) என்ற ஐந்தும் கர்மேந்திரியகளுடைய விஷயங்களாகும். ஹாநம் (விடுதல்) உபாதாநம் (கொள்ளுதல்) உபேக்ஷா (உதாஸீநம்) இவை மூன்றும் முறையே தியாகபுத்தி ; க்ராஹ்யபுத்தி ; உதாஸீநபுத்தியென்று சொல்லப்படும்.

இம்மூன்றையும் அந்த ஐந்து கர்மேந்திரியங்களோடு சேர்த்தால் எட்டு எண்ணிக்கையாகின்றது. ஆகவே இவைகளை முறையே அநங்ககுஸுமா; அநங்கமேகலா; அநங்கமதநா; அநங்கமதநாதுரா; அநங்கரேகா; அநங்க வேகிநீ; அநங்காங்குசா; அநங்கமாலிநீ என்ற எட்டு வித சக்திகளின் அபேத வடிவங்களாகப் பாவனை செய்ய வேண்டும். (14)

अलम्बुसा कुहूर्विश्वोदरा वारणा हस्तिजिह्वा यशोवती पयस्विनी गान्धारी पूषा शाङ्खिनी इडा पिङ्गला सुषुम्णा चेति चतुर्दश नाड्यः सर्वसंक्षोभिण्यादिचतुर्दश शक्तयः ॥१५॥

(பொ-ரை) அலம்புஸா முதல் ஸுஷும்ணா வரையி லுள்ள பதினான்கு நாடிகளும் ஸர்வஸம்க்ஷோபிணீ முத லான பதினான்கு தேவதைகளின் வடிவங்களாகும்.

அலம்புஸா; குஹூ; விச்வோதரா; வாரணா; ஹஸ்தி ஜிஹ்வா; யசோவதீ; பயஸ்விநீ; காந்தாரீ; பூஷா; சங்கிநீ; ஸ்ரஸ்வதீ; இடா; பிங்களா; ஸுஷும்ணா எனச் சரீரத்தி னுள்ளே விளங்குகின்ற பதினான்கு நாடிகளையும் முறையே; ஸர்வஸம்க்ஷோபிணீ; ஸர்வவித்ராவிணீ; ஸர்வாகர்ஷிணீ; ஸர்வாஹ்லாதிநீ; ஸர்வஸம்மோஹிநீ; ஸர்வஸ்தம்பிநீ; ஸர்வஜம்பிநீ; ஸர்வரஞ்ஜிநீ; ஸர்வவசம்கரிணீ; ஸர்வோந் மாதகாரிணீ; ஸர்வார்த்தஸாதிகா; ஸர்வஸம்பத்பூரணீ; ஸர் வமந்த்ரமயீ; ஸர்வத்வந்த்வக்ஷயம்கரீ எனவழங்கப்பெறும் மந்வச்ரதேவதைகளோடு அபேதவடிவாகக் கொள்ள வேண்டும்.

முன்பு நவநாதர்களுடைய ஸ்வரூபங்களைச் சொல்லும் பொழுது அவ்விடத்திலேயே நாடிகளுடைய ஸ்வரூபங்கள் வர்ணித்திருக்கின்றன. அந்த நாடிகளைக் காட்டிலும் இந்த மந்வச்ரதேவதைகள் வேறன்று என்பதும் அறியத்தக்கதாகும். (15)

**प्राणापानव्यानोदानसमाननागकूर्मकृकरदेवदत्तधनंजया**
**दश वायवः सर्वसिद्धिप्रदादिबहिर्दशारगा देवताः ॥१६॥**

(பொ-ரை) பிராணன் (பிராணவாயு) முதல் தனஞ்யன் இறுதியாகவுள்ள பத்து வாயுக்களும்; ஸர்வஸித்திப்ரதா முதலான தேவதைகளின் வடிவங்களாகும்.

பிராணன்; அபானன்; வியானன்; உதானன்; ஸமானன்; என்ற ஐந்து மஹாவாயுக்களையும்; நாகன்; கூர்மன்; க்ருகரன்; தேவதத்தன்; தனஞ்ஜயன் என்ற ஐந்து உபவாயுக்களையும் சேர்த்து பத்துவித வாயுக்களையும் முறையே; ஸர்வார்த்த ஸாதகமென்ற பெயருடன் கூடிய பத்துக் கோணங்களில் வஸிக்கின்ற; ஸர்வஸித்திப்ரதா; ஸர்வஸம்பத்ப்ரதா; ஸர்வப்ரியங்கரீ; ஸர்வமங்களகாரிணீ; ஸர்வகாமப்ரதா; ஸர்வதுக்கவிமோசனீ; ஸர்வம்ருத்யுப்ரசமநீ; ஸர்வவிக்நநிவாரிணீ; ஸர்வாங்கஸுந்தரீ; ஸர்வஸௌபாக்யதாயிநீ; என்ற பத்துவித சக்திதேவதைகளோடு அபேதமாகக் கொள்ளவேண்டும்.

பிராணன் முதலிய வாயுக்களுடைய ஸ்திதி (நிலை) வருமாறு; ஹிருதயத்திலியங்குவது பிராணன். உத்ஸர்க்கத்தினிடை நிற்பது அபானன். சரீரம் முழுவதும் பரவி நிற்பது

வியானன்; கந்தரஸக்குழியின் சந்திடை நிற்பது ஸமானன்; நாபியிலே (தொப்பூழ்) நிற்பது உதானன், நீட்டலும், முடக்கலும், சினக்கலும் செய்வது நாகன்; உரோமம் சிலிர்க்கச்செய்வது கூர்மன். முகத்தினிடையே நின்று தும்மலும், சிரமும், வெம்மையும் விளைவிப்பது க்ருகரன். ஓட்டமும், இளைப்பும், வியர்த்தலும் விளைவிப்பது தேவதத்தன். உயிர் போகினும் போகாது உடலை வீக்கித்தலை கிழித்தகல்வது தநஞ்ஜயன். (16)

एतद्वायुसंसर्गकोपाधिभेदेन रेचकः पाचकः शोषको दाहकःप्लावक इति प्राणमुख्यत्वेन पञ्चधा जाठराग्निर्भवति ॥ १७ ॥

क्षारक उद्गारकः क्षोभको जृम्भको मोहक इति नागप्राधान्येन पञ्चविधाः; ते मनुष्याणां देहगाः भक्ष्यभोज्यलेह्यपेयात्मकपञ्चविधमन्नं पाचयन्ति॥१८॥

एता दश वह्निकलाः सर्वज्ञाद्या अन्तर्दशारगा देवताः ॥ १९ ॥

(பொ-ரை) இந்த பத்துவித வாயுக்களுடைய சேர்க்கையினுலுண்டாகிய உபாதி (அவஸ்தை) பேதத்தினுல் ஜாடராக்நியானது, ரேசகம்; பாசகம்; சோஷகம்; தாஹகம்; ப்லாவகம்; (நிறைத்தல்) என ஐந்தும், மஹாவாயுக்களுடன் பிராணனை முக்கியமாகக்கொண்டு ஜாடராக்கினியும் ஐந்து விதங்களாகும்.

அவ்விதமே க்ஷாரகம்; உத்காரம்; (உமிழ்தல்) க்ஷோபகம்; ஜ்ரும்பகம்; மோஹகம்; என ஐந்தும், உப

வாயுக்களுடன் நாகனைப் பிரதானமாகக் கொண்டும் ஐந்து விதங்களாகும். அவைகள் மனிதர்களுடைய சரீரத்தில் பாவி, பக்ஷ்யம், போஜ்யம், சோஷ்யம், லேஹ்யம், பேயம் என்ற ஐந்து விதமான ஆஹாரங்களையும் ஜீரணம் செய்கின்றன. இந்தப் பத்துவித அக்நிகளும் ஸர்வஜ்ஞா முதலிய உள்ளேயிருக்கின்ற கோணதேவதைகளின் வடிவங்களாம்.

இவ்விடத்தில் ஜாடராக்நியினுடைய மேல் புறத்திலே பத்து வாயுக்களுடைய சேர்க்கையின் காரணமாகப்பிரிந்திருக்கின்ற ரேசகம், பாசகம், சோஷகம், தாஹகம், ப்லாவகமென்ற ஐந்து மஹாவாயுக்களுடைய தொழில்களையும், க்ஷாரகம், உத்காரம், க்ஷோபகம், ஜ்ருப்பகம், மோஹகமென்ற ஐந்து உபவாயுக்களுடைய தொழில்களையும் சேர்த்துப் பத்து விதமாக ஜாடராக்கினியானது பிரிக்கிப் பட்டிருக்கின்றது. இந்தப் பத்து அக்நிகலைகளே பிராணிகள் புசிக்கும் ஆஹாரங்களை ஆங்காங்கு பரவச் செய்து நன்கு ஜீரணமடையைச் செய்கின்றன என்பதும் தாத்பர்யம்.

இங்கு மேலே கூறிய பத்து அக்னிகலைகளையும் முறையே; ஸ்ரீசக்ரத்தினுள்ளேயிலங்கும் பத்துக் கோணவரைகளிலிருக்கின்ற ஸர்வஜ்ஞா; ஸர்வசக்தி; ஸர்வைச்வர்ய ப்ரதாயினீ; ஸர்வஜ்ஞாநமயீ; ஸ்ர்வவ்யாதிவிநாசிநீ; ஸர்வாதாரரூபிணீ; ஸர்வபாபஹரா; ஸர்வாநந்தமயீ; ஸர்வரக்ஷாகரீ; ஸர்வேப்ஸிதபலப்ரதா என்ற பத்து தேவதைகளோடு அபேத வடிவாகக் கொள்ளவேண்டும். (17-19)

**शीतोष्णसुखदुःखेच्छाः सत्त्वं रजस्तमो वशिन्यादि शक्तयोऽष्टौ ॥ २० ॥**

(பொ-ரை.) சீதம் (தண்மை) முதலியவைகளும், ஸத்வம் முதலிவைகளும் வசினீ முதலிய எட்டுவித சக்திகளின் வடிவங்களாம்.

சீதம்; (குளிர்ச்சி) உஷ்ணம்; (சூடு) ஸுகம்; (ஆனந்தம்) துக்கம்; (வருத்தம்) இச்சா; (விருப்பம்) ஸத்வம்; ரஜஸ்; தமஸ்; என்ற எட்டு விதமான குணங்களையும் முறையே; வசினீ; காமேச்வரீ; மோதினீ; விமலா; தருணு; ஜயினீ; ஸர்வேச்வரீ; கௌலினீ என்ற ஸர்வரோகஹர (ஸமஸ்தவியாதிகளையும் அகற்றுவது) சக்ரத்திலுள்ள வாக்தேவதைகளோடு அபேதவடிவங்களாகக் கொள்ளவேண்டும். (20)

**शब्दादितन्मात्राः पञ्च पुष्पबाणाः ॥ २१ ॥**

(பொ-ரை) சப்தம் முதலிய ஐந்து தந்மாத்திரைகளும் ஐந்துவித மலர்களாலான புஷ்பபாணத்தின் வடிவங்களாகும்

சப்தம்; (ஒலி) ஸ்பர்சம் (உணர்வது) ரூபம்; (பார்வை) ரஸம்; (சுவை) கந்தம்; (மணம்) என்ற ஐந்தும், முறையே தாமரை, சிவப்பு அல்லி, கல்ஹாரம், ஆம்பல், மாம்பூ என வழங்கும் ஐந்து புஷ்பங்களையும், ஸ்ரீதேவியினுடைய பாணத்தோடு அபேத வடிவாகக் கொள்ள வேண்டும். (21)

**मन इक्षुधनुः ॥ २२ ॥**

(பொ-ரை) மனம் (அவிக்ருதமானது) கரும்பாலாகிய வில்லின் வடிவம்.

சப்தம் முதலிய ஐந்து தந்மாத்ரைகளுக்கும் கோசரமாக (புலனாக) இருந்து கொண்டு, இந்திரியங்களுடைய காரியங்களைத் தூண்டச்செய்வதால் நிர்விகாரமான மனதைக் கரும்பாலாகிய வில்லோடு பேதமற்றதாகப் பாவனை செய்யவேண்டுமென்பது தாத்பர்யம். (22)

रागः पाशः ॥ २३ ॥

(பொ-ரை) ஆசையே (பற்றுதலே) பாசம் (கயிறு) என்பது.

இவ்விடத்தில் ஆசை யெனப்படுவது சரீரத்தினுள்ளே முப்பத்தாறு தத்துவங்களிலும் பரவி நிற்கும் ப்ரீதியேயாகும். அந்த ப்ரீதியுடன் பேதமற்றதாகப் பாவனை செய்யவேண்டும்.

இங்கே ஆசையென்னும் பதத்திற்கு முன்பு சொல்லப் பட்ட 'இச்சை' என்ற பதத்தினுடைய பர்யாயமாகக் கொள்ளக்கூடாது. முன்னர் கூறிய இச்சையானது இங்கு சொல்லப்படுகின்ற அருணை வாக்தேவியைக்காட்டிலும் வேறு பட்டதாகும். ஆகவே இங்கு புனருக்தி (அதாவது சொல்லியதைத்திரும்பச் சொல்லுவது) என்ற தோஷம் கிடையாது என்பதும் அறியத்தக்கதாகும். கட்டுப்படுத்துவது என்ற ஸாமான்ய தர்மத்தைக் கொண்டு இச்சைக்கும் பாசத்திற்கும் பொருள் ஒன்றே யென்பதும் பொருந்தும். (23)

द्वेषोऽङ्कुशः ॥ २४ ॥

(பொ-ரை) த்வேஷம் (வெறுப்பு) அங்குசம்(மாவெட்டி) என்பது.

இந்த த்வேஷமானது விஷயாதிகளுடைய தோஷங்களி னின்றும் விலக்குவதால் அங்குசத்தையொக்குமெனக் கூறப்பட்டது. (24)

अव्यक्तमहदहङ्काराः कामेश्वरीवज्रेश्वरीभगमालिन्यो-
ऽन्तस्त्रिकोणगा देवताः ॥ २५ ॥

(பொ-ரை) அவ்யக்ததத்துவம் முதலியவைகள் மத்ய (நடுவு) த்ரிகோணத்திலிருக்கின்ற காமேச்வரீ முதலிய தேவதைகளின் வடிவங்கள்.

அவ்யக்ததத்துவம், மஹத்தத்துவம், அஹங்காரதத்துவ மென்ற மூன்று தத்துவங்களையும் சரீரத்தினுள்ளே மத்ய த்ரிகோணத்திலிருக்கின்ற காமேச்வரீ; வஜ்ரேச்வரீ; பகமாலினீ என்ற தேவதைகளோடு அபேத வடிவாகக் கொள்ளவேண்டும்.

இவ்விடத்தில் அவ்யக்ததத்துவமாவது, ரஜ்ஜுவிலே (கயிறு) ஸர்ப்பத்தின்தோற்றம்போல பரப்ரஹ்மத்தி னிடத்தில் விவர்த்தமாகத் (மற்ற பதார்த்தங்களினின்றும் வேறு படுத்தி வஸ்துவின் வடிவையறிவிப்பது எதுவோ அதுவே விவர்த்தமென்பது) தோன்றுகின்ற மூலப்ரக்ருதி (மூலப்ரக்ருதி யென்பது முக்குணங்களும் தோன்றுமிட மாகும். முக்குணங்களும் தோன்றாது நிற்குமிடமே அவ்யக்தமாகும். இந்த அவ்யக்ததத்துவத்திலே சித்தமும், புத்தியும் நிற்கும். புத்தியிலேதான் அஹங்காரம் தோன் றுவது) என்னும் சக்தியாம்.

மஹத்தத்துவமாவது; அறிவு - புத்திதத்துவம். இது மஹேசன் புருஷனையும், ப்ரக்ருதியையும் பார்க்க அவை

தத்தம் நிலையினின்று சலனப்படுவது. (அசைவது) அப்பொழுது ப்ரக்ருதியின் தோற்றத்திலே காரியம் நடப்பதாகும். இதுவே மஹத்தத்துவமென்பது.

அஹங்காரதத்துவமாவது: இது முப்பத்தாறு தத்துவங்களிலொன்ருகும், அல்லது அந்தக்கரணம் நான்கினுள் ஒன்ருகும். அது புத்தியினுல் நிச்சயித்து க்ருஹிக்கப்பட்ட (இழுத்துக் கொள்வது) விஷயங்களை, "நான் செய்தேன்" என்று நிச்சயம் செய்வதும், பிராணவாயுவினுல் அன்னபாநாதிகளை கிரஹித்துக் கொள்வதும், அவைகளை ஒன்று செய்யும் தொழிலில் பிரவர்த்திப்பதும் 'யான்' 'எனது' என்னும் அபிமானம் கொள்ளுவதுமாகும். அல்லது மநதுக்கும் மேலே பத்துப்பங்கு படர்ந்து தாணுவட்டக் கருக்கிடமாயுள்ள ஒரு தத்துவமாகும். (25)

**निरुपाधिकसंविदेव कामेश्वरः ॥ २६ ॥**

(பொ-ரை) உபாதியற்ற சுத்த சைதந்யமே பிந்துவின் வடிவானகாமேச்வரன். 'ஸம்வித்தே காமேச்வரன் என்பது*' ஸம்வித் (சைதன்ய) தின் வடிவே பிந்துரூபியான காமேச்வரன்' என்று ஆகமங்களும் கூறும். (26)

**सदानन्दपूर्णः स्वात्मैव परदेवता ललिता ॥ २७ ॥**

(பொ-ரை) எப்பொழுதும் ஆநந்தம் நிறைந்து பரிபூர்ணமாயிருக்கின்ற தன்னுடைய ஆத்மசைதந்யத்தின் ஒரு அம்சமே பரதேவதை யென்னும் லலிதாதேவியாம்.

இவ்விடத்தில் யாதொரு உபாதி (அவஸ்தை) களோடும் கூடாத சுத்த சைதந்யத்தை விசேஷணமாகக் கொண்ட

---

* "संवित्कामेश्वरः स्मृतः"

காரணத்தாலே அதனுடைய அருகிலிருக்கின்ற பரதேவதையை உபாஸனு வடிவங்கொண்ட ஞாநத்தால் நிரூபணம் செய்யப்பட்டிருக்கின்றது. பரதேவதை தன்னோடு வேறுபடாத உபாஸனுவடிவமான ஞாநவிசேஷத்தால் நிரூபிக்கப்பட்ட முக்கிய விசேஷத்தை யுடையவள் என்பது தாத்பர்யமாகும். அந்த பரதேவதையையே விசேஷமான பெயரோடு லலிதா என கூறப்படுவதுமாம்.

இங்கே 'ஸதாநந்தபூர்ணம்' என்னும் பதமானது ஆத்மாவினுடைய உபாதியைச் சொல்லுவதாகும். ஆகவே, அந்தக் கரணவடிவாகிய ஆத்மாவினிடத்தில் உபாஸனே செய்ய வேண்டுமென்ற வகுப்பில் பிரவேசமுள்ளது கொண்டு லலிதா என்னும் தன்மை கிடையாது. அக்காரணத்தாலே 'ஸ்வாத்மா' என்னும் பதம் கொடுக்கப்பட்டிருக்கின்றது. ஸ்வாத்மா என்றால் ஸ்வஸ்ய-(உபாஸகனுகிய) தன்னுடைய ஆத்மா-அந்தர்யாமீ என்பது பொருள். ஆகையால் ஆத்மாவும் அந்தர்யாமியும் எனக்கிடைக்கின்றது. இவ்விதம் ஒரே பொருளைக் குறிக்கின்ற ஆத்மாவும் அந்தக் கரணேபாதியையடைந்து உபாஸகனுகவுமிருக்கின்றது. ஸத்-சித்-ஆநந்தம் என்ற தன்மைகளின் வடிவாகிய தர்மத்ரயங்களினுல் விடுதலையடைந்த தர்மிமாத்திரமாயிருப்பவனும், உபாஸிக்கத்தக்க தேவதைக்கு ஆதாரமாயிருந்துகொண்டு சுத்தசைதந்யவடிவாயிப்பவனுமான காமேச்வரன் ஸத்தும் ஆநந்தமுமாயிருப்பவன். சித்தே பரதேவதையாகிய லலிதா.

இக்கருத்தையே; "*பரம்ஹமமானது, நித்யமாயும், தோஷலேசமற்றதாயும், நிரதிசயஸுகவடிவாகவும், இரண்டற்ற ப்ரஹ்மசைதந்யத்தின் வடிவாகவும், மாயாவசத்தால் தர்மம், தர்மீ என இருவகையாகப் பிரிந்திருப்பதுமாகும். அவ்விடத்தில் தர்மமானது ஸகலகார்யங்களுக்கு அநுகூலமாகவும், எல்லா விஷயங்களைப்பற்றியதாயும் அநுபவவடிவாயுமுள்ளது. சக்தியானது ஸ்வதந்திரவடிவாயிருப்பது. ஆனால் குணங்களுக்கு ஆதாரம் ஒன்றேயாகும்."

"அங்கே உலகங்களுடைய ஐந்துவிதத்தொழில்களிடத்திலே கர்த்ருத்வம் (தலைவன்) என்றதையே தர்மமெனச் சிலர் எண்ணுகின்றனர். புருஷவடிவாயும், தர்மவடிவாயுமுள்ள ஆத்மா ஸகலஜகத்தினுடைய உபாதாநபாவத்தைத் தாங்குகின்றது. அதுவே பெண்மையடைந்து தனக்கு ஆதாரமாயுள்ள ஆதிகர்த்தாவுக்கு பிரகாசத்தைக் கொடுக்கின்ற மஹிஷீ (மனைவி) யெனவும் வழங்கப்படுவது. வேதங்களை யுணர்ந்தவர்களுடைய தர்மியைப்போன்ற

---

*नित्यं निर्दोषगन्धं निरतिशयसुखं ब्रह्म चैतन्यमेकं
धर्मो धर्मीति भेदद्वितयमिव पृथग्भूय मायावशेन ।
धर्मस्तत्रानुभूतिः सकलविषयिणी सर्वकार्यानुकूला
शक्तिः स्वेच्छादिरूपा भवति गुणगणस्याश्रयस्त्वेक एव ॥
कर्तृत्वं तत्र धर्मं कलयति जगतां पञ्चसृष्ट्यादिकृत्ये
धर्मः पुंरूपमास्त्वा सकलजगदुपादानभावं बिभर्ति ।
स्त्रीरूपं प्राप्य दिव्या भवति च महिषी स्वाश्रयस्यादिकर्तुः
प्रोक्तौ धर्मप्रभेदावपि निगमविदां धर्मिवद्ब्रह्मकोटी ॥
रत्नत्रयपरीक्षा १, ३

ப்ரஹ்மத்தின் வாதமானது தர்மத்தினுடைய பெரிய பேதத்திலும் சொல்லப்படுகிறது." என ரத்நத்ரயபரீக்ஷையும் வலியுறுத்தும். (27)

**लौहित्यमेतस्य सर्वस्य विमर्शः ॥ २८ ॥**

(பொ-ரை) இந்த ஸர்வத்திற்கு லௌஹித்யமே (சிவப்பு) விமர்சமென்பது.

இவ்விடத்தில் ஸர்வபதத்தினால் காமேச்வரனையும், லலிதாதேவதையும், தன்னையும் குறிப்பிடுவதாகும். இவ்விதம் இந்த மூன்றையும் அபேத வடிவாக அநுஸந்தானம் (அப்யாஸம்) செய்வதே தேவியைச் சார்ந்த லௌஹித்யமாகும். மற்றும் சிவப்பு நிறத்தோடு கூடிய பிரபாபடலமானது உலகில் எல்லோருக்கும் மநதில் (தன்னிடத்தில்) ஒரு வித அநுராகத்தை (ப்ரீதி) யுண்டு பண்ணுகின்ற காரணத்தால் இவ்விடத்தில் ராகம் (ப்ரீதி) என்பதற்கும் லௌஹிதியம் (சிவப்பு) என்பதற்கும் அபேதம் (ஒன்றுயிருக்குமுவமை) கூறப்பட்டது. இக்கருத்தையே; "தானும், சைதந்யமும் உலகத்தின் வடிவாயமைந்த லலிதையுமே தேவதை எனச்சொல்லப்படுகிறது. அந்த மூன்று வஸ்துக்களுடைய விமர்சம் லௌஹித்யம். அவைகளை உபாஸனை செய்வதே பாவனையென்பது" எனத் தந்த்ராஜமும் வலியுறுத்தும்.*

இவ்விடத்தில் நிருபாதிகமென்னும், பதத்தினால் கேவலத் (முக்ய) தன்மையையும், ஸதாநந்தபூர்ண என்ற பதத்தினால் தர்மவிசிஷ்டத்தையும், சொல்லியதால் விசிஷ்டத்

* स्वात्मैव देवता प्रोक्ता ललिता विश्वविग्रहा ।
लौहित्यं तद्विमर्शः स्यादुपास्तिरिति भावना ॥

திற்கும் (விசேஷணத்தோடு கூடியது) கேவலத் (முக்ய) திற்கும், அவயவத்திற்கும், அவயவிக்கும் போல அயுதஸித்தி களான (பிரிவின்மை) அந்த இரண்டுக்கும் தாதாத்ம்யமே ( ஒன்ருயிருக்கும் தன்மையே ) ஸம்பந்தமாகும். ஸம் யோகம் (சேர்க்கை) முதலிய பேதங்களாலுண்டாகியது அன்று. ஆகவே அந்த ஸம்பந்தமும் திரிபுரஸுந்தரிக்கும், காமேச்வரனுக்கும் விக்ரஹ வடிவாயிருக்கின்ற இரண்டு ஸ்தூலவடிவங்களேயாகும்.

"காமேச்வராங்கநிலயா" (காமேச்வரனுடைய மடியி லிருப்பவள்) என்ற பதத்தினல் வியவஹாரம் செய்யப்படு கின்ற சிவசக்திகளுடைய ஸாமரஸ்யவடிவம், லாக்ஷைக்கும் (அரக்கு) படலத்திற்கும் (வஸ்த்ரம்) போல சேர்க்கையின் விசேஷமேயாகும். இதுவே வாஸனையென்பது.

இவ்விதம் உபாதிகளினுல் விடுதலையடைந்த சுத்தத் திற்கே, ஸ்படிகத்தினுடைய வர்ணாந்தரங்களுக்கு நாசமேற் படாத காலத்திலே தான் வியக்தமாகக் காணப்படுகின்ற சுத்தஸ்படிகத்தினுடைய அபேதமே எனக் கிடைப்ப தாகும். இதுவே காமேச்வரனிடத்தில் சுக்ல (வெளுப்பு) சரணவாஸனையென்பது. அநுஸந்தானத்திற்கு அஹ மென்ற மாநஸவியாபாரவிசேஷமாத்திரவடிவத்தாலே அதனுடைய விஷயங்களுக்கு, விஷயஸம்பந்தத்தினல் வியாபாரமென்ருவது, வியாபாரஸம்பந்தத்தினல் மன துக்கே யாவது ராகத்தின் ஒற்றுமையிலே முடிவு எற்படு வதால், அந்த ஸம்பந்தத்தின் காரணமாகவே ரக்த (சிவப்பு) சரணவாஸனையென்பது. 'ஸர்வஸ்ய' என்றதால் விஷயங் களுடைய தன்மைக்கு விசேஷ்ய விசேஷங்களுடைய ஸம்

பந்தங்களிடத்தில் வியாப்தியைச் (பரவுதல்) சொல்லுகின்ற காரணத்தால் சரணத்திற்கும் பிரபைக்கும் ஸமரஸபாவ மென்றும், ஸம்பந்த வடிவான மிச்ரசரணத்திற்கும் வாஸனை யென்பதும் ஸூசனை செய்யப்பட்டது எனக் கண்டு தெளியவேண்டும்.

தந்திரங்களிலே "குருவே ஆதிசக்தியாகும் †" என்று சொல்லியிருக்கின்ற வாஸனைகளுடைய அநுஸந்தாநமே உபாஸனையென்னும் பதத்திற்கு வாச்யமென்று சொல்லு வது நான்காவது சரணமாகும். அல்லது உபாஸனைக்கும் மூன்று வடிவங்களுண்டு. அவை விக்ரஹங்களின் உருவ மானஸ்தூலவடிவம், மாநஸிகஜபமென்னும் ஸூக்ஷ்ம வடிவம், இந்த பாவனையே பரம் என்ற வடிவம். ஆதலின் உபாஸனைவடிவாகிய வாஸனையினுடைய விசேஷபாவனை யென்ற ப்ரமம் கொள்ளக்கூடாது. (28)

**अनन्यचित्तत्वेन च सिद्धिः ॥ २९ ॥**

(போ-ரை) சித்தத்தின் காரியங்களை ஒரு முகமாச் செய் வது ஸித்தியென்பதாகும்.

பஹிர் (வெளிப்படை) யாகங்களில் ஒவ்வொரு ஆவ ரணத்திலும் ஒவ்வொரு ஸித்தியும், ஒவ்வொரு முத்திரையும், பூஜை செய்யப்படுகிறது. அதனுடைய வாஸனையை விதிப்பதாகும் இந்த ச்ருதிவாக்யம். இங்கு, அநந்யசித் தத்வம், என்ற பதம் ஒற்றுமையைக் குறிப்பதாகும். 'ச'

---

† "गुरुराद्या भवेच्छक्तिः"

என்ற ஸமுச்சய (ஒன்று சேர்ப்பது) பதமும் முத்திரைகளைக் குறிப்பதாகும். இக்கருத்தை; "சித்தியென்பது வேறுபடாத (ஒரு முகமாகச் செய்யப்பட்ட) சித்தத்தினுடைய காரியம். முத்ரையென்பது வைபவத்தின் வாஸனை" என்று தந்த்ரராஜம் கூறும். §

அதாவது அந்த அந்த ஆவரணதேவதைகளுடைய ஸர்வசரீராவயவவிசேஷங்களோடு அபேதமாகப்பாவனை செய்தாலும், தன்னைக் காட்டிலும் வேறுபடாததாகக் கொண்டு சித்தத்திலே பாவனைசெய்வதே அந்த அந்த ஆவரணங்களிலிருக்கின்ற ஸித்தியெனப்படுவது. 'இந்த ஸித்திகள் அனைத்தும் என்னைக் காட்டிலும் வேறுபடாதவைகள் என்னும் புத்தியின் தோற்றமே என்க. இங்கே ஸித்திபதத்தை உபாஸனையிலிருந்து உண்டாகும் பலத்தின் வடிவேயாகும் எனச் சிலர் கூறுகின்றனர். அவர்களுடைய ஸித்தாந்தப் பிரகாரம் முன்பு கூறிய இடைவிடாத பாவனையால் விஷயங்களுடைய வைலக்ஷண்யங்களோடு (தனது நிலையிலிருந்து பிரிந்திருப்பது) சேர்ந்த அபேத வடிவாகவே உபாஸனையின் பலத்தைக் கொடுக்கின்றது எனப் பொருள் கொள்ளவேண்டும்.

உண்மையில், சொல்லப் போகின்ற தர்ப்பணத்தில், விஷயங்களுடைய வைலக்ஷண்யம் விலக்கப்படுவதால் இவ்விடத்தில் நாம் சொல்லிய ஸித்திகள் என்றே பொருள் கொள்ளவேண்டும். அவைகளுக்கே வைபவமென்றும் சொல்லப்பட்டது. அதாவது ஆவரணதேவதைகளுடைய

§ सिद्धिस्त्वनन्यचित्तत्वं मुद्रा वैभववासना ।

அபரிச் சிந்நமான (பிரிக்கப்படாத) தன்மையும், அந்த பாவனையுமே அந்த அந்த ஆவரணத்திலிருக்கின்ற முத்ரை யென்பதாம். (29)

**भावनायाः क्रिया उपचारः ॥ ३१ ॥**

(போ-ரை) முன்பு கூறிய பாவனையினுடைய செய்கையே உபசாரம்.

இதுவரையில் தன்னோடு அபேதவடிவைச் சொல்லி வந்த லலிதாதேவியினுடைய பாவனைகளை இடைவிடாது அநுஸந்தானம் செய்து வருவதே உபசாரமெனப்படுவதாம். இந்த உபசாரமானது, பேதபுத்தியுடன் செய்யப்படுகின்ற சந்தனம், புஷ்பம் முதலியவைகளுடைய பாவனையில் முன்பு சொல்லிய (ஸ்வாத்மா) தன்னுடைய அபேதாவஸ்தைக்கு வித்யாஸம் வருவதால் அதற்கு விரோதமில்லாத உபசாரங்களை ஸமர்ப்பணம் செய்யவேண்டுமென்பது கருத்தாகும்.

இக்கருத்தையே; "உபசாரங்கள் சலநத்தையடைந்திடினும் தந்மயத்திலே (ஒன்றுவதிலே) ஸாவதாநமாயிருத்தல் இன்றிமையாதது." என தந்த்ரராஜமும் கூறும்‡; அதாவது அபேதபாவனைக்குறிய மனோதைர்யமில்லாவிடினும், ப்ரஹ்மத்தைக்குறித்த பாவனையிலே நழுவாது ஸாவதாநமாயிருத்தல் அவச்யமென்பது தாத்பர்யமாகும்.

என்னினும் 'சல' என்னும் சப்தத்திற்கு லக்ஷ்யமாக நழுவுதல், ஸ்வப்நம் முதலிய அவஸ்தைகள் என்ற பொருளை

---

‡ उपचाराश्चलत्वेऽपि तन्मयत्वाप्रमत्तता ।

தந்த்ரராஜத்திற்கு உரைகண்ட ஆசிரியர் கூறுகிறார். அப்படியிருந்தாலும், 'அபி' என்ற சப்தத்தின் வலுவைக் கொண்டு ஜாக்ரத் காலத்திலும் ஸாவதாநத்தை மாத்திரம் அவச்யம் சொல்லியிருப்பதாகக் கொள்ளவேண்டும். இந்த ஸாவதாநத்தின் லக்ஷணம் யோகவாஸிஷ்டத்தில் கூறியிருக்கின்ற சிவபூஜையில் விரிவாகக் காணலாம்.

ஆத்மாவினுடைய விஷயபோகங்களிலிருந்து உண்டாகிய ஸமஸ்தஸுகதுக்கங்களுக்கும், தனது அபேதாநுஸந்தாநமானது, ப்ராரப்தத்தினால் அடையப்பட்ட ஸுகதுக்கத்திற்கும், கர்மக்ஷயத்திற்கும் காரணமாயிருப்பதால் பரிணமஸுகத்தைக் கொடுக்கின்ற கசப்புள்ள கஷாய வஸ்துக்களால் தனது சரீரத்தினுடைய உத்வர்த்தம்போல பாவனைக்கு ஸபர்யை (உபசாரம்) யின் வடிவமே என்பது இங்கு கூறப்பட்ட முடிவாகும்.

இக்கருத்தையே ; "என்னுடைய செய்கை ஒவ்வொன்றும் உன்னுடைய ஸபர்யை (உபசாரம்) என்பதற்கு மற்றொரு பெயராக இருக்கட்டும்" என ஸ்ரீசங்கரபகவத்பாதரும் தமது ஆநந்தலஹரியில் கூறுகின்றார். ஆகவே இவ்வித பாவனோபசாரமானது எப்பொழுதும் செய்யத்தக்கதாயிருப்பதால் இவைகளுக்குக் காலம் முதலிய நியமங்கள் ஒன்றும் கிடையாது. சந்தனம், புஷ்பம் முதலிய வெளிப்படையான உபசாரங்களும் வேண்டுவதில்லை.

அது எவ்விதமெனில் வருமாறு ; தன்னுடைய மஹிமையிலே அபேதவடிவாக நிலைத்திருப்பதே ஆஸநம் ; (1)

"விராட்புருஷனுடைய பாதமே வியத் (ஆகாசம்) முதலிய பிரபஞ்சம்"* என்பது போல பரப்ரஹ்மத்தினுடைய பாதவடிவமான ஆகாசம் முதலிய பிரபஞ்சத்தில், "இருக்கிறது, பிரகாசிக்கிறது, பிரியம்" முதலியவை போன்ற பாவங்களின் வடிவங்களே ஜலமென்பது. இந்த ஜலத்தினலே நாமரூபங்களான மலங்களை யகற்றுவதே பாத்யம். (2) ஆகாசம் முதலிய ப்ரபஞ்சங்களுடைய ஒரு பகுதியாகக் கல்பனை செய்யப்பட்ட ஸூக்ஷ்ம ப்ரபஞ்சத்தினுடைய நாமரூபங்களான மலங்களை யகற்றுவதே அர்க்யம். (3) பாவனையின் வடிவாகிய ஜலத்தையருந்துவதே ஆசமநம். (4) ஸத்வம், சித்வம், ஆநந்தத்வம் முதலிய அவயவங்களோடு அபேதமாயிருக்கும் பாவனையென்னும் ஜலத்தினுடைய ஸம்பந்தமே ஸ்நாநம். (5) அந்த அவயவங்களிலேயே முன்பு சொல்லப்பட்ட ஜலத்தின் ஸம்பந்தம் கொண்டு விருத்திவிஷயங்களை மறைக்கப்படுகின்ற பாவனையே வஸ்த்ரம். (6) நிர்விஷயத்வம், (விஷயங்களிலே பற்றற்ற நிலை) நிரஞ்ஜநத்வம் (பரிபூர்ணத்தின் தன்மை) முதலிய பரப்ரஹ்மத்தினுடைய அடையாளங்களைத் தெரிவிக்கின்ற பல காரியங்களுண்டு. அவைகளுடைய தர்மமும், தன்னுடைய தர்மமும் ஒன்றுபட்டது என்று பாவனைபண்ணுவதே ஆபரணம். (7) தன்னுடைய சரீரத்திலிருக்கின்ற பார்த்திவம், (மண் ஸம்பந்தம்) நாபஸம், (ஆகாசஸம்பந்தம்) வாயவம், (வாயுஸம்பந்தம்) தைஜஸம், (அக்நிஸம்பந்தம்) முதலியவைகளுடைய அம்சங்களின் ஜடத்தன்மையை சித்தினுடைய சந்திரமண்

---

*पादोऽस्य विश्वा भूतानि ।

டலத்திலுள்ள அமுதப்பெருக்கைக் கொண்டு அகற்றி ஸச்சிதானந்த வடிவமாத்திரமாயிருக்கின்ற பரப்ரஹ்மமாக பாவனை செய்வதே கந்தம், (சந்தனம்) புஷ்பம், தூபம், (புகை) தீபம் (ஒளி அல்லது விளக்கு) நைவேத்யம் (உணவு) தாம்பூலம் (வெற்றிலை முதலியன) என்ற ஆறு உபசாரங்களுமாகும். இக்கருத்தையே, " (அன்னையே!) உன்மயமாகவே நைவேத்யம் முதலியவைகளால் உன்னை அர்ச்சனை செய்யவேண்டும். பஞ்ச பூதங்களின் வடிவாயமைந்த இவ்வுலகும் அந்த ஸநாதநமாயிருக்கிற (பழமை) உன்னுடையதே" என்று நித்யாதஹ்ருதயமும் கூறும்.* (8-13) பச்யந்தீ, மத்யமா, வைகரீ, பரா என்ற நான்கு வாக்குகளையும், தன்னுடைய நாதத்தின் (சப்தம்) வழியாக பரப்ரஹ்மத்தினிடத்தில் லயமடையச் செய்கின்ற பாவனையே ஸ்தோத்ரமாகும். (14) இங்கும் அங்கும் அலைந்து கொண்டிருக்கின்ற சித்த விருத்திகளுடைய ஜடத்தன்மைகளையகற்றி பரப்ரஹ்மத்தினிடத்திலே ஸமர்ப்பணம் செய்வதே ப்ரதக்ஷிணமாகும். (15) விஷயங்களில் செல்லுகின்ற (மனோ) விருத்திகளைத் திருப்பி பரப்ஹ்மத்தினிடத்திலே லயிக்கச் செய்வதே நமஸ்காரமாகும். (16) இவ்விதம் ஷோடச (பதினாறு) உபசாரங்கள் சொல்லப்பட்டன. (31)

**अहं त्वमस्ति नास्ति कर्तव्यमकर्तव्यमुपासितव्यमिति**
**विकल्पानामात्मनि विलापनं होमः ॥ ३२ ॥**

---

* भवतीं त्वन्मयैरेव नैवेद्यादिभिरर्चयेत् ।
पञ्चभूतमयं विश्वं त्वन्मयी सा सनातनी ।

(போ-ரை) நான், நீ, இருக்கிறது, இல்லை, செய்ய வேண்டும், செய்யவேண்டாம், உபாஸிக்கவேண்டும், என்ற ஏழு விகல்பங்களுடைய விசேஷமானலயத்தை ஆத்மாவினிடத்திலே ஆஹுதி செய்வதே ஹோமமாகும்.

இவ்விடத்தில் உபாஸிக்கவேண்டாமென்பதை உபநிஷத்துக்களிலே சொல்லாத காரணத்தால் அந்த நிஷேதத்தைக் குறிப்பிடவில்லை. நான் நீ என்றதால் பரமாத்மா ஜீவாத்மா என்ற இரண்டையும்; இருக்கிறது, இல்லையென்றதால், விதி, நிஷேதம் என்ற இரண்டையும்; செய்ய வேண்டும், செய்யவேண்டாம் என்றதால், கர்மகாண்டம், ஞானகாண்டமென்ற இரண்டையும்; உபாஸிக்க வேண்டுமென்றதால் வேதத்தின் சிரஸாக விளங்குகின்ற உபநிஷத்தையும் சொல்லப்பட்டதென அறியவேண்டும்.

இந்த வாக்கியத்தில் கூறப்பட்ட ஏழு விருத்திகளையும், அவைகளுக்குக் காரணமான பரமாத்மாவினிடத்தில் லயித்திருப்பதாக பாவனை செய்ய வேண்டும். இதையே; "இவ்விதமான விருத்திகளுக்கு தன்னிடத்திலே (ஆத்மாவினிடத்தில்) லயமென்பது உறுதியாம்" என ஆகமமும் வலியுறுத்தும். (32)

## भावनाविषयाणामभेदभावना तर्पणम् ॥ ३३ ॥

(போ-ரை) பாவனையின் விஷயங்களுடைய அபேத பாவனையே தர்ப்பணமாம்.

"ஸ்ரீ குரு" என்று ஆரம்பித்து, ஹோமம் வரையில் விஷயங்களுடைய விலக்ஷணங்களால் சொல்லப்

பட்ட பேதபாவனைகளை பரிகணநம் செய்யாத (கணக்கில் சேர்க்காத) நிர்விகல்பமான துரீய கண்டத்தை (நான்காவது பகுதியை) நிச்சயம் செய்து, அதையும் தியாகம் செய்து தானே எஞ்சி நிற்கும் நிலையே தர்ப்பணமாமென்பது. (33)

இதுவரையில் முப்பத்திரண்டு உபநிஷத்வாக்கியங்களால் சரீரவடிவாயமைந்த ஸ்ரீ சக்ரத்திற்கு தான் மாத்திரம் எஞ்சிநிற்கும் நிலை சொல்லப்பட்டது. இப்பொழுது அதோடுகூட வெளிப்படையான அவயவமாயமைந்த ப்ரபஞ்சத்தையும் தன்னோடு கூட சேர்த்து லயிக்கும்படி செய்கின்ற பாவனையானது இந்த வாக்கியத்தில் உபதேசிக்கப்படுகிறது—

## पञ्चदशतिथिरूपेण कालस्य परिणामावलोकनम् ॥ ३४ ॥

(பொ-ரை) பதினைந்து திதிகளின் வடிவங்களால் காலத்தினுடைய பரிணமத்தைப் (மாறுதல்) பார்க்கவேண்டும்.

காலமே ப்ரபஞ்சத்தின் வடிவாகப் பரிணமித்திருக்கிறது. அது எவ்விதமெனில் சந்த்ரமண்டலத்திலிருக்கின்ற "ஸாதா" என்ற கலையைக்காட்டிலும், வேறுபட்டவைகளான, "தர்சா, த்ருஷ்டா, தர்சதா" என்று ச்ருதிகளிலே சொல்லப்பட்ட பதினைந்து கலைகளுமுண்டு. அக்கலைகளே ப்ரதமை முதல் பூர்ணிமா வரையிலுள்ள திதிகளாகும். திதிகளின் வடிவங்களான அக்கலைகளே "காமேச்வரீ" முதல் "சித்ரா" வரையிலுள்ள நித்யாகலை

களின் அபேத வடிவங்களாகும். ஸாதா என்ற கலேயே ஸ்ரீலலிதா. இவ்விதம் நித்யம் சுழன்று கொண்டிருக்கின்ற காலத்தின் வடிவமான திதியென்னும் சக்ரத்தின் நடுவே, ஸ்ரீசக்ரமுள்ளது. அந்த ஸ்ரீசக்ரம் வெளியிலிருப்பது அல்ல. அதன் காரணமாகவே ஸர்வப்ரபஞ்சமும் நித்யா கலைகளின் வடிவமெனச் சொல்லப்பட்டது. உண்மையில் எல்லா சக்திகளும் 21600 ச்வாஸங்களின் வடிவங்களாயிருக்கின்ற காலத்தின் உருவாயமைந்த கலைகளாகும். அவைகளுடைய ஸமஷ்டியே ஸ்ரீலலிதா. பதினைந்து நித்யா கலைகளும் வ்யஷ்டி வடிவத்தோடு (பிரிந்திருப்பது) ஒவ்வொன்றும் 1440 ச்வாஸரூபங்களாகின்றன எனப் பாவனை செய்யவேண்டும். இந்த வாக்கியத்திற்கு விசேஷமான அர்த்தத்தை ஸ்ரீபாஸ்கரராயருடைய பாஷ்யத்தில் கண்டு தெரிந்துகொள்ளலாம். (34)

இவ்விதம் அந்தரங்கமாகவும், வெளிப்படையாகவும் ஸமஸ்தப்ரபஞ்சத்தினுடைய விலயத்தை (ஒடுங்குதல்) முன்னிட்டுக்கொண்டு தான் மாத்திரம் எஞ்சியிருக்கின்ற பாவனையானது, ச்வாஸங்களை நிரோதம் (தடுத்து) செய்து நிர்விகல்பக விருத்தியோடுகூட இரவும் பகலும் இடைவிடாது பாவனைசெய்து வரவேண்டுவது அவச்யமெனக் கூறப்பட்டது. இப்பொழுது அந்த பாவனையைச் செய்ய சக்தியற்ற உபாஸகர்களை; உத்தமம், மத்யமம், அதமம் என்று மூன்றுவிதமாகப்பிரித்து, அவர்களுக்கு மூன்றுவிதமான கால நியமத்தையும் அடுத்துவரும் வாக்கியத்தில் உபதேசிக்கப்படுகிறது—

एवं मुहूर्तत्रितयं मुहूर्तद्वितयं मुहूर्तमात्रं वा भावनातत्परो
जीवन्मुक्तो भवति ; स एव शिवयोगीति गद्यते ॥ ३५ ॥

(பொ-ரை) இவ்விதம் மூன்று முஹூர்த்தமாவது ; இரண்டு முஹூர்த்தமாவது ; ஒரு முஹூர்த்தமாவது பாவனையிலே நிலைத்திருக்க ஜீவன் முக்தியுண்டாகின்றது. அவனே சிவயோகியென்றும் சொல்லப்படுகிறது.

'இவ்விதம்' என்றதால் இடைவிடாததும், தனக்கே கோசரமாவதுமான (புலப்படுவது) முன்பு சொல்லப்பட்ட ச்வாஸஸ்தம்பநத்தோடு (தடுத்தல்) கூடிய நிர்விகல்பமான விருத்திகள் சொல்லப்பட்டதெனக் கிடைக்கின்றது.

விருத்திகளைக் காட்டிலும் வேறுபட்ட பாவனையிலே ஒருவன் அதையே உறுதியாகக் கொண்டு வேறு பாவனைகளில் கிரியைகளுடைய தொழில்கள் இல்லாதவனாயிருந்தால் அவன் வெகு விரைவில் ஜீவன் முக்தி நிலையையடைகின்றான்.

சிவயோகிகளான ஜைகீஷவ்யர் முதலியவர்கள் இந்த பாவனைகளை அப்யாஸம் செய்து ப்ரம்ஹத்தினுடைய மேலான பதவியையடைந்தனர். மூன்று வேதங்களும் (ருக்-யஜுஸ்-ஸாம) வெளிப்படையான கர்மாக்களை வெளியிடுவனவாம். இந்தத் தலைசிறந்த அதர்வவேதமோவெனில் அந்தரங்கமான கர்மாக்களை வெளியிடுவதாம். இந்த உபநிஷத்தும் அதர்வவேதத்தின் சிரஸே போன்றது. (35)

कादिमतेनान्तश्चक्रभावनाः प्रतिपादिताः ;
य एवं वेद ; य एवं वेद ॥ ३६ ॥

(போ-ரை) இந்த உபநிஷத்தில் அந்தரங்கமான ஸ்ரீசக்ர பாவனைகள் எவைகள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ, அவை 'காதி' என்ற பெயருள்ள சக்திமதத்தையநுஸரித்துச் சொல்லப்பட்டதாகும். கௌலமதத்தையநுஸரித்துச் சொல்லப்பட்டவையல்ல.

இந்த உபநிஷத்திற்கு இவ்வளவு சிறப்பு வாய்ந்த பா னைகளை வெளியிடக்கூடிய சக்தியுண்டு என்பதை எவனொரு வன் ஒவ்வொரு பதத்திலும், ஒவ்வொரு வாக்கியத்தின லும் உணர்ந்து கொள்ளுகின்றானோ, அவனே அதர் சிரஸை அத்யயநம் (அப்யாஸம் அல்லது பாடம்) செய் வனாகிறானென்பதும் தாத்பர்யமாகும். சிவம்.

இவ்விதம் அதர்வ சிரஸாகிய பாவனோபநிஷத்
வாதூல - வேங்கடஸுப்ரஹ்மண்யருடைய
தநயன் ராமசந்த்ரசர்மா இயற்றிய
பாவப்ரகாசிகா என்னும்
தமிழுரையுடன்
இவண் முற்றும்.

---

Bharati Vijayam Press, Triplicane, 1500-5-48.